# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச்சங்கத் திங்கள் வெளியீடு.

துணர் உம் } தாரண—ஆனி 1944—சூன் { மலர் ௩

## இலங்கையோர் செயலை எண்ணிமேற் கொள்க!

இலங்கைமா நகர் எனில் யாம் எப்பொழுதும் தமிழ் வளர்த்த நாடென்று எண்ணி இறைஞ்சினோம்; ஏத்தினோம். இன்றும் அந்நாட்டின் எழில்மிகு செயல் கண்டு ஏத்துகின்றோம், போற்றுகின்றோம். முற்காலத்துச் சங்கநூல்களில், "ஈழத்துணவும் காழகத்தாக்கமும் அரியவும் பெரியவும்" ஆயபொருள்கள் தமிழ் நாட்டின் புகார்நகரத் துறைமுகத்தில் நீரின்வந்து குவிந்து கிடந்தன எனச் சங்கச்சான்றோர் எழுதியுள்ளனர். தமிழ்நாட்டுச் சோழமன்னர்கள் இலங்கையை வென்று அடிப்படுத்தி ஆண்டார்கள் என அவர்கள் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. இங்ஙனம் இலங்கையொடு தமிழ்நாடு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தே வாணிபம் காரணமாகவும், அரசியல் காரணமாகவும் தொடர்புகொண் டிலங்கியதைத் தமிழ் நூல்களும் கல்வெட்டுக்களும் உறுதிசெய்கின்றன.

பிற்காலத்திலும் தமிழ் ஓலைச் சுவடிகளையெல்லாம் தமிழர் பிறர்க்கு அள்ளிக் கொடுத்துவிட்டு ஒன்றுமறியா ஊமையராக, செவிடர்களாக; குருடர்களாக வாழ்ந்த காலையில் இலங்கை நகர் தமிழ்ப்பணி புரிதலையே தலைமேற்கொண்டு தமிழர்க்கு வழிகாட்டிற்று. இலங்கைமா நகரிற்றோன்றித் தொல்காப்பியம், கலித்தொகை முதலிய பல சிறந்த நூல்களை முதன்முதல் அச்சிட்டுத் தமிழர்க்குதவிய திருவாளர், இராவுபகதூர், சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்களைத் தமிழர் மறத்தற்கியலுமோ? அங்ஙனமே இலங்கையிற்றோன்றித் திருக்குறள், சேனாவரையம், நன்னூல் முதலிய பன்னூல்களை அச்சியற்றி வெளியிட்டுத் தமிழ் உரைநடை நூல்களையும் வெளியிட்டுத் தமிழ்ப்பணி புரிந்த ஆறுமுக நாவலரவர்களைத் தமிழர் எங்ஙனம் மறத்தற்கியலும்? ஆரியர்களே தமிழ் நூல்களனைத்தையும் அச்சிட்டுத் தமிழர்க்குப் பிச்சையளித்தனர் என்னும் பழிமொழியைப் பெயர்த்தற்கும், தமிழர் அறிவின் திண்மையை வெளிப்படுத்தற்கும்

இவ்விரு பெரியோர்களும் தமிழ் நூல்களை ஆதரவு குன்றிய அக் காலத்திலேயே அச்சிட்டுதவியுள்ளார்கள். இவர்கள் இருவர்க்கும் தமிழ்நாடு என்றென்றும் நன்றிபாராட்டுங் கடப்பாடுடையது. இதுபோதும் இலங்கையிற்றோன்றித் தமிழர் என்றென்றும் போற்று முறையில் "மதங்கசூளாமணி" எனும் கூத்தியன் நூலையும், இசைத் தமிழ் இயல் உணர்த்தும் "யாழ்நூ"லையும் எழுதியுதவிய அருட்டிரு **விபுலாநந்த அடிகளாரின்** தமிழ்ச் சீர்த்திப் பணிக்குத் தமிழ்நாடு கடமைப்பட்டுளது.

**"இலங்கை இலங்கையர்க்கே"** எனும் முழக்கெழும்பிய இக்காலத்தில் இலங்கையோர் தாய்மொழியிடத்துப் பற்றுக்கொண்டு, செய்த எழில்மிகு செயலைத் தமிழர்கள் எண்ணிப் பார்க்கவேண்டுகின்றோம். இலங்கைச் சட்டமன்றத்தில் நிறைவேறிய முடிபுகளைத் தமிழன்பர்களின் பொருட்டுக் கீழே தருகின்றோம் :

1. சிங்களம், தமிழ் இவற்றின் மூலமே பள்ளிக்கூடங்களில் பாடங்கள் போதிக்கப்பட வேண்டும்.

2. சர்க்காரின் கல்வி இலாகா நடத்தும் தேர்வுகளில் இவ்விரு மொழிகளும் கட்டாய பாடமாக இருக்கவேண்டும்.

3. சட்டசபையின் நடவடிக்கைகளை இவ்விரு மொழிகளிலும் நடத்தலாமென்று அனுமதித்துச் சட்டம் இயற்ற வேண்டும்.

4. வேற்றுமொழிகளிலுள்ள புத்தகங்களில் எவற்றையெல்லாம் மொழிபெயர்க்கலாமென்று உறுதிப்படுத்தவும் மொழிபெயர்க்கவும் ஒரு குழுவினை நியமிக்கவேண்டும்.

5. ஆங்கிலமே உத்தியோக மொழியென்ற நிலைமை மாறி, சிங்களமும் தமிழும் உத்தியோக மொழியாகும் நிலைமை ஏற்படுதற்கு என்ன என்ன காரியங்கள் செய்யவேண்டியிருக்கும் என்பதை ஆலோசித்து அறிவிக்க ஒரு குழுவினை நியமிக்கவேண்டும்.

இம்முடிபுகளைக் கண்டபின்னரேனும் இங்நாட்டில் வாழும் தமிழ் மக்கள் விழித்தெழுந்து உணர்ச்சியும் ஊக்கமும் பெற்றுத் தங்கள் நாட்டு மண்டிலச் சட்ட மன்றத்திலும் இத்தகு முடிபுகள் நிறைவேறுதற்குரிய பணிகளை மேற்கொண்டு செயலாற்றி வென்றி கொள்வார்களாக.

தமிழ்நாட்டரசர்கள் குமரியொடு வடஇமயத் தொருமொழியாகிய தமிழ்மொழியே தழைக்க முற்காலத்துச் செங்கோலோச்சினர் எனத் தமிழ்நூல்கள் கூறுகின்றன. யாம் இமயம் வரையில் இந்நாளில் தமிழ் முழங்க ஏற்பன செய்ய ஆற்றல் அற்றேமாயினும் நம் தமிழ் நாட்டிலேனும் உயர்நிலைப் பள்ளி, கல்லூரிகளில் தாய்மொழியாகிய தமிழ்மொழி வழியே உறுதியாகக் கல்விகற்பிக்க ஏற்பன

செய்தோமா? இமயம்வரைத் தமிழ் முழங்க அவ்விமயத்தின் மீதும் வில், புலி, கயல்பொறித்த வீர மன்னர்களின் வழித்தோன்றல்களா யாம்? வடநாட்டில் தமிழ் வழங்க வழிகண்ட மன்னர் மரபிற்றோன்றிய யாம் வடநாட்டில்வழங்கும் இலக்கணவரம்பில்லா மொழியாகிய இந்தியைக் கட்டாய பாடமாகப் படிக்கவேண்டுமென வற்புறுத்தப் பெற்றேமெனின் நம் இழிநிலைமைக்கிரங்காதவர் ஆரியரன்றிப் பிறருளரோ? இவ்விழிநிலைமை ஒழியத் தமிழ் மக்கள் எழுச்சியுறுக, எழுச்சியுறுக, என எழுச்சியூட்டுகின்றேம். எழுச்சியுற்று இலங்கையோர் செயலை மேற்கொண்டு பணியாற்றுவார்களாக. இந்நாட்டில் அரசியல் மொழியாகத் தமிழ்மொழி ஆக்கம்பெற யாம் விரைவில் ஆவனசெய்ய முற்படவேண்டும். தமிழ்நாட்டு மண்டிலச் சட்டமன்றத்தினர், நகரமன்றத்தினர், நாட்டாண்மைக்கழகத்தினர்யாவரும் உறைத்த உளத்துடன் தமிழிலேயே இனி யாங்கள் எல்லாச் செயலையும் புரிவோமெனும்உறுதிகொள்வார்களானால் அவ்வுறுதியினின்றும் அவர்களை மாற்றிவிட உலகமக்களின் உரிமைக்காகப் போரிடுகின்றேம் எனும் அரசாங்கம் முயற்சிக்குமோ? யாம் உறுதிப்பாட்டுடனிருந்தால் யாம் விரும்பாமொழியை வற்புறுத்திப் பயிலச்செய்ய, பேசச்செய்ய, இந்நாட்டில் உரிமை யாருக்குளது? உறுதிவேண்டும்; ஊக்கம் வேண்டும். உறுதியும் ஊக்கமும் உடைய மக்களை யார் என்செய இயலும்? **யாம் முடியிழந்தோமாயினும், அரசிழந்தோமாயினும், நாடிழந்தோமாயினும், அடிமைகளானேமாயினும், உலகிலுள்ள உயர்தனிச் செம்மொழிகளெனப் போற்றப்பெறும் மொழிகளுள் ஒன்றெனமதிக்கத்தகுந்த, பிறமொழியின் உதவியின்றித் தனித்தியங்கவும், செழித்தோங்கவும் வன்மைவாய்ந்த உயர்தனிச் செம்மொழியாகிய தமிழ்மொழியைப் பெற்றுள்ளோம்.** இம்மொழியின்றேல் தமிழர் தனியின மக்களென யாம் உலகினர்முன் கூறற்கியலுமோ? இங்ஙனம் உலக மக்களினின்றும் தனி நாகரிகமும் தனிமொழியும் கலைகளும் பெற்றுச் சிறந்த தமிழ்இன மக்கள் ஒருபகுதியினர் உளர்என வரலாற்று நூலாசிரியரும் பிறரும் நம்மை மதிக்கச்செய்தது நம் தமிழ்மொழியன்றோ?

மலையாளமொழி வடமொழியைப்புணர்ந்து மாறுபட்டாற்போல, தெலுங்கு வடமொழியின் காதலால் சிதைவுற்றாற்போல, கன்னடம் வடமொழிக் கலப்பால் பழைய, புதிய உருப்பெற்றாற்போல, துளுவம் வடமொழியின் அலையால் துவண்டுவிட்டாற்போலத் தமிழ்மொழியும் சாய்வுறாமல் மாற்றமுறாமல், **"யான் உயர்தனிச்செம்மொழி"** என இறுமாந்து நிற்றற்குக் காரணம் நம் தமிழ்ப்புலவர்களாய முன்னோர்கள் புரிந்த செயலன்றோ? அவர்கள் வடமொழி தமிழ்மொழியில் வந்து கலந்து வழங்கவேண்டுமாயின் ஒரு மதத்தினின்றும் வேற்று மதத்திற் சேர்வோன் தான் சேர்ந்த மதத்தின் கொள்கைகளை மேற்கொண்டமைக்கு அறிகுறியாகச் சில குறிகளை மேற்கோடல் போலத்தமிழியலுக்கு ஏற்பத் தமிழ்ஓசையை ஏற்றுத் தமிழ்ச்சட்டை யணிந்துதான், பொல்லா வடமொழியாகிய நீ, வழங்கவேண்டுமென வரையறுத்து இலக்கணம் வகுத்துக் கண்ணிணை இமை காப்பதுபோல் வடமொழியைத் தடிந்து நம் தமிழ்மொழியைக் காவல்புரிந்து வந்தனர்.

அப் புலவர்பெருமக்களின்றேல் தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளுவம் முதலிய தமிழின மொழிகள் சிதைவுற்றாற்போல நம் தமிழ் மொழியும் சிதைந்தொழிந்திருக்குமன்றோ ?

புலவர்களின்றேல் யாம் கொச்சைமொழி பேசும் மக்களாகக் கலப்புமொழிபேசும் கலப்பின மக்களாக இன்று வரலாற்றுநூல் ஆசிரியர்களால் கருதப்பட மாட்டோமா ? இங்ஙனம் கைம்மாறு கருதாது மொழித்தூய்மை ஒன்றையே கருதிப் பண்டைக்காலந் தொட்டு இன்றுவரையிற் றமிழ்ப்புலவர்கள் நம் தாய்மொழியாகிய தமிழ்மொழிக்குச் செய்துள்ள அளப்பருந் தொண்டுகளை எண்ணி யெண்ணி உருகுவதல்லது யாம் வேறு என்செய வல்லோம் ? இது போதும் அருட்டிரு மறைமலையடிகளார் போன்றார் செய்துபோதரும் தனித்தமிழ்த் தொண்டிற்குத் தமிழ்நாடு ஆதரவு தருகின்றதா ? ''யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவதெங்குங் காணோம்'' என மேடையிற் பாடுவோரும், தமிழ் மக்களின் ஓட்டுரிமையைப் பெற்றவுடன் அம்மொழியை அழிக்கச் சதிசெய்வோருமாய மக்களைப் போற்றுகின்ற அளவுதானும் இத்தனித்தமிழ் ஆசிரியரைத் தமிழர் போற்றுகின்றனரா ? இப் பெரியார் வரைந்துள்ள தனித்தமிழ்நூல்கள் அத்துணையும் தமிழர் வருங்கால வாழ்விற்கோர் அடிப்படையன்றோ? தமிழ்மொழி வளம்பெற வேண்டுமேல், தூய்மையுறவேண்டுமேல், மறைமலையடிகள் எழுதிய நூல்கள் அனைத்தும் தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களில் பாட நூல்களாக அமைதல்வேண்டும். தமிழர் அங்ஙனமாக ஆவன செய்தலை மேற்கொள்வார்களாக ! தமிழ் வளர்த்தலையே தலையாய பணியாகக் கொண்டுள்ள எம் சங்கம் போன்ற கழகங்களை நிலைக்களனாகக் கொண்டு இலங்கையரசினர்செயலை எண்ணித் தமிழர் விழித்தெழுந்து பணியாற்றித் தமிழ்மொழி அரசியல் மொழியாக ஆவன செய்ய வேண்டுமெனத் தமிழர்களை வேண்டிக்கொள்ளுகின்றோம். இலங்கை ஆட்சி மன்றத்தினர் எம் நாட்டிற்கும் அறிவுறுத்தும் முறையில் முற்பட்டு இத்தகு முடிபுகளைச் சட்ட மன்றத்திற்குக் கொண்டு போய் நிறைவேற்றியமைக்கு அவர்களைப் பாராட்டுகின்றோம்.

பொழிலாசிரியர்

## மதிப்புரை.

வடாற்காடு மாவட்டத் திருவத்திபுரம் பாநுகவி மாணவர்கழகப் புலவர், திருவாளர், த. குருநாதன் அவர்களின் நினைவு மலர் வரப்பெற்றோம். திரு. குருநாதன் அவர்கள் ஐயாற்றில் கல்விபயின்று வித்துவான் பட்டம் பெற்று, ஈரோடு மாசன உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியரா யிருந்து தமிழ்ப்பணி யாற்றியவர். தன் இளம் மனைவியையும் இளம் மகனையும் விட்டு விட்டு இளமையிலேயே இவர் இயற்கை யெய்தியது மிகத்துன்பந் தருகின்றது. இப்புலவரின் நினைவுமலராக ஒரு சிறந்த மலரை வெளியிட்டுதவிய **திரு, அ. தம்பிரான் அவர்களையும், வித்துவான், கோ. வில்வபதி அவர்களையும்** யாம் பாராட்டுகின்றோம்.

# தாமஸ் ஹென்றி ஹக்ஸ்லி
## Thomas Henry Huxley
## (1825—1895)

திருவாளர், த. ப. நவநீதகிருட்டினன் அவர்கள், அண்ணாமலைநகர்.

**ப**த்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாலஸும் (Wallace) டார்வினும் (Darwin) கண்டுபிடித்த, 'உள்ளது சிறத்தல்' (Evolution) எனும் கொள்கை வெளியிடப்பட்டபோது, மக்களிடைப் பெரும் கிளர்ச்சி தோன்றியது. சமயக் கொள்கைகளை அக்கொள்கை எதிர்த்ததெனப்பலர் எண்ணினர். ஆதலின் சமயத்தலைவர்பலரும் மற்றோரும் அக்கொள்கையை எதிர்த்தும் ஏளனம்செய்தும் வரலாயினர். அவருடன் அறப்போர்தொடுத்து, தம்அறிவாற்றலின் துணைகொண்டு, இறுதியில் அக் கொள்கையின் வெற்றிக் கொடியை நிலைநாட்டின பெருமை ஹக்ஸ்லி (Huxley) என்ற பேரறிஞருக்கே உரியதாகும். இங்ஙனம், ஹக்ஸ்லி சமயத்தலைவரை எதிர்த்தாராதலின், இவர் சமய உணர்ச்சியை அழித்தவரென்று இவரைப்பலர் கருதலாயினர். இன்னும், இவர்பருப்பொருள்கள் (Concrete) பாற்பட்ட உண்மையேயன்றி வேறு எவ்வகையான உண்மையும் இலதென்றும், சோதனையின் துணைகொண்டு காரணங்கூற இயலா எவையும் மக்களால் கருதப்படுதற்கு உரியவையன்றென்றும் எடுத்துரைத்து, பலரின் உளவமைதியைக் குலைத்தவரென்றும் பெயர் பெற்றனர். ஆயினும், ஹக்ஸ்லி உண்மையானதும் ஆழமானதுமான சமயப் பற்றுடனிருந்தவரே யாவர் என அவர் மொழிகளினின்றே காட்டலாம். ஓரமயம் இவர் கூறியதாவது:

"அறிவின் பாற்பட்ட ஒழுகலாறுகள் யாவும் விஞ்ஞானத்தினுள்ளடங்கினவையேயாம். அதுவே, அறநெறியென்பதாம். உணர்ச்சியின்பாற்பட்ட ஒழுகலாறுகள் விஞ்ஞானத்திற்குப் புறம்பானவை. பருப்பொருள்களின் இயல்பையும், புலனாகாப் பொருள்களையும் அகக்கண்கொண்டு பகுத்தறியும்போது எழும் உணர்ச்சியின் மேலீட்டால் விளையும் வியப்பும் பணிவும், அச்சத்தின்பாற் படாதபோது, சமயத்தின் என்றும் மாறாத உண்மையின் இயல்பினை அடைந்தவையாம்."

இன்னும் இவர் பின்வருமாறு கூறியுள்ளார்:

"சமயக் கோட்பாடுகள் என எவற்றையும் நான் என்றும் எதிர்த்தவனல்லன். நாத்திகம் பேசி நாத்தழும்பேறினவரை நான் பெரிதும் வெறுத்தவன் ஆவேன்".

மேலும் இவர் கூறியுள்ளதாவது:

"இம்மைக்குப் பயன்படும் கல்வியே பள்ளிகளில் கற்பிக்கப்பட வேண்டும் என நான் வற்புறுத்துவதால் என்னைச் சமயத்தை எதிர்க்கின்றவனென எண்ணலாகாது. சமயங்கள் பலவுள்ளன ஆதலின்

குறித்த ஒரு சமயத்தின் கோட்பாடுகளை மட்டும் கற்பித்தல் சரியன்று, என்றே யான் கூறுவதாகும். ஒழுகலாற்றுக்கு அடிப்படையாயுள்ளது சமயமேயென்பதை நான் நன்குணர்ந்தவன்.''

எனவே, ஹக்ஸ்லி சமயத்துடன் இணைந்து அதன் பெருமையைக் குறைத்து, அது மேம்படாவண்ணம் கீழ் அமிழ்த்திவந்த பயனற்ற சுமைகளாகிய புறக் கோலங்களையே அகற்ற எண்ணினார். ஆதலின், இவர் சமயத்திற்கு உண்மையான தொண்டாற்றினவரேயன்றி, அதை அழித்தவரன்று. ஆயினும், அக்காலத்தில் பல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட கிறித்துவ சமயக் கொள்கைகளையும், அவை மட்டுமே உண்மையெனக் கூறிவந்த குறுகிய நோக்கமுடைய சமயத் தலைவர்களையும், இவர் எதிர்த்ததால், இவர் சமயவிரோதி என்று அக்காலத்தினரால் கருதப்பட்டார். வேஸ் (Wace) என்ற சமயத்தலைவர் இவரை ஒரமயம் பின்வரும் மொழிகளால் தாக்கினார்.

"இயேசு கிறித்துவிடம் நம்பிக்கையில்லையென்று ஒரு மகன் கூறுவானாயின் அவன் இன்பமற்றவனாவான்; ஏன், இன்பம்பெற உரிமையற்றவனாவான்,'' இதற்கு ஹக்ஸ்லி பின்வருமாறு விடை பகர்ந்தார்:

"'உரிமையற்றவன்' எனச் சீரிய ஒழுக்கத்தினரான ஒருவர் மற்றொருவரைப்பற்றி என்றும் கூறமாட்டார். கிறித்துவின் பொன்னனைய மொழிகளால் உலகம்பெற்ற பல நன்மைகளை, தம் சீர்கெட்ட கோட்பாடுகளால், கிறித்துவ சமயத்தலைவர் அழித்துவிட்டனர். இன்னும் அச்சமயத் தலைவர், அன்பையே போற்றின அப் பெரியாரின் நன்னெறியை மறைத்து, தாம் எடுத்துரைத்த கருத்தை ஏற்காதவர் அறநெறி பிறழ்ந்தவராவரென்றும், பெருந்தீமை விளைவித்தவரென்றும் கூறி மக்களை அச்சத்தின்பாற்படச் செய்து, ஆட்சி செய்தவராவார்.''

இங்ஙனம், குறுகிய உளப்பான்மையுடனிருந்த சமயத் தலைவர்களை எதிர்த்து, முதன் முதலாக மக்கள் எப்பொருளைப் பற்றியும் கருத்து வேற்றுமைகள் கொண்டிருத்தற்கு உரிமைபெற்றவரே யெனும் பரந்த கருத்தை நிலைநாட்டிய உண்மைவீரர் ஹக்ஸ்லியே யாவர். இவர், தம் அறிவு முதிர்ச்சியாலும், உண்மையை நிலைநாட்டும் ஆர்வத்தாலும், மக்கள் நன்மையை நாடும் பெற்றியாலும், பேருழைப்பினாலும், சீரிய ஒழுக்கத்தினாலும், உள உறுதியினாலும், மக்களுள் தலைசிறந்து விளங்கினார். உண்மையை நிலைநாட்ட முற்பட்டபோது, பிறர் எதிர்ப்பால், இவர் ஆர்வம் மிகைபட்டதேயன்றி என்றும் குன்றவில்லை. இன்னும் இவர் நுண்கலை சுவைக்கும் உணர்ச்சியையும் பெரிதும் பெற்றவர். நாற்சுவையிலும் திளைத்தவர். உற்ற நண்பர் பலரால் எக்காலத்தும் சூழப்பட்டு இருந்தவர். இங்ஙனம் இவர், நவில்தொறு நூல்நயமறியும் பேற்றையும் பயில்தொறும் பண்புடையாளர் நட்பையும் ஒருங்கே பெற்றார். இவ்வாறான வாய்ப்புக்கள் பலவற்றையுமடைந்த ஹக்ஸ்லி பரந்த நோக்கத்துடன் பொலிந்

தார் என்பதில் வியப்பொன்றுமில்லை. தம் விஞ்ஞான ஆராய்ச்சியின் விளைவுகளை, இவர், தக்க சான்றுகளின்றி வெளியிடுவதில்லை. "சூழ்ச்சி முடிவு துணிவெய்தலத்துணிவு தாழ்ச்சியுள் தங்குதல் தீது" எனும் மூதுரைக்கோர் உற்ற சான்ருய் இவர் இலங்கினர். பிறர் வெளியிட்டவற்றையும் தீரவிசாரியாது ஏற்றுக்கொள்ளார். "சமன் செய்து சீர்தூக்குங்கோல் போலமைந்தொருபாற் கோடாமை சான்றோர்க்கணி" யென்பதே விஞ்ஞானிகளின் குறிக்கோளாயிருத்தல் வேண்டும் என இவர் காட்டினர். இத்தகைய பெற்றிவாய்ந்த இவரை 'ஐயுறுகின்றவர்' (agnostic) என்று அழைக்கலாயினர். விஞ்ஞானத்தினின்றெழுந்த இம் முறையை மக்கள்பின்னர், பல துறைகளிலும் பயன்படுத்தலாயினர். புலன் வாயிலாய் அறியக்கூடிய சோதனைகளால் நிலை நாட்டப்படாத ஒன்றை ஏற்றுக்கொள்ளாதவர் 'ஐயுறுகின்றவர்' என்று வழங்கப்படலாயினர். 'கடவுள் இல்லை' யென்று கூறுதும், 'கடவுள் உண்டு' என்று அறிவின் பாற்பட்ட சோதனைகளால் நிலைநாட்டப்படாதவரை அக்கருத்தையும் ஏற்காதும், 'நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தையன்றேயொழிய விடல்' என்னும் கருத்தையுடையார், 'ஐயுறுகின்றவர்' என்று அழைக்கப்படுகின்றனர். இங்ஙனம் எக்கருத்தின் உண்மையையும் அதனை வெளியிட்டவருடன் இணைக்காது, தனியே அதன் பண்பினைக் கொண்டே தகுதியை அறிந்து நிலைநாட்டல் வேண்டும், அஃதாவது "எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினுமப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு" எனும் கொள்கையை மக்கள் கருத்தில் நன்கு ஊன்றுமாறு செய்தவர் ஹக்ஸிலியே. இனி ஹக்ஸ்லியின் வாழ்க்கை வரலாற்றைத் தொடங்குவோம்.

தாமஸ் ஹக்ஸ்லி 1825-ம் ஆண்டு மே 4-ம் நாள் ஈலிங் (Ealing) என்ற சிற்றூரில் தோன்றினர். இவரது தந்தை, ஒரு சிறு பள்ளியில் ஆசிரியராய் இருந்தார். தாமஸ் ஈருன பிள்ளையானமையின், இவர் தாய் இவரை மிக்க அன்புடன் பேணிவந்தார். இவரும், என்றும் தம் அன்னையின்பால் மிக்க அன்புடனிருந்துவந்தார். தம் தந்தையார் பணியாற்றி வந்த பள்ளியில் தாமஸ் தம் எட்டாவது ஆண்டினின்று பத்தாவது ஆண்டுவரை கல்வி பயின்றனர். 1834-ம் ஆண்டில் அப்பள்ளி எடுபட்டமையின், இவர் தந்தை, காவண்ட்ரீ (Coventry) என்ற நகர் சென்று அங்கு ஒரு பொருள் நிலையத்தில் (Bank) எழுத்தாளர் வேலையிலமர்ந்தார். அங்கு, தாமஸ் எப்பள்ளிக்கும் செல்லாது தம் வீட்டிலேயே பல நூல்களைப் பயின்றுவந்தனர். கார்லைல் (Carlyle) என்ற இலக்கியப் பேரறிஞர் ஆக்கிய பல நூல்களையும் நன்கு கற்றுணர்ந்தனர். கார்லைல் தம் நூல்கள் யாவற்றினும் 'இவ்வுலகில் மக்கள் இன்பம்பெறப் பிறந்தவரல்லர். தம் கடமையை யாற்றவே தோன்றியவராவர்' எனும் கருத்தையே விளக்கியவர். தாமஸ் ஹக்ஸ்லியும் அதையேதம் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டார். கார்லைல் தம் கருத்துக்களை, ஜர்மன் நாட்டுப் பேரறிஞரின் வாயிலாகவே பெற்றனர் என்பதை அறிந்த ஹக்ஸ்லி, தாமும் ஜர்மன் மொழியைக் கற்றுணர்ந்து, அம்மொழியிலும் வல்லுநராயினர்.

*1841*-ம் ஆண்டில் மருத்துவத் தொழிலில் பயிற்சிபெற இவர் இலண்டன் நகரத்திற்கு அனுப்பப்பட்டார். அங்கு, சாண்ட்லர் (Chandler) என்ற மருத்துவனரிடம் மருந்து கலக்கும் முறையையும், பயிர் நூலையும் கற்றுவந்தனர். அதன்பின், தம் உறவினரான ஸ்காட் (Scott) என்பவரிடம் மருத்துவத்தொழில் முறைகளைக் கற்கலாயினர். இக்காலத்தே, இவர், "ஒன்றாவுலகத்துயர்ந்த புகழல்லாற்பொன்றாது நிற்பதொன்றில்" என்ற உண்மையையறிந்து, அப்புகழெய்தும் பேரவாவைக் கொண்டார். அதை அடைவதற்கேற்றவாறு, பேருழைப்புடன் பல பொருள்களைப்பற்றியும் பயிலவேண்டும் என்று முடிவு கட்டினர். முடிவுகட்டினவாறே ஒழுகியும் வந்தார். இவ்விடாமுயற்சியின், முதற்பயனாய், *1842*-ம் ஆண்டில் பயிர்நூற் சோதனையில் முதல்வராய்த்தேறிப் பரிசும் பெற்றார். சேரிங்க்ராஸ் (Charing cross) என்ற மருத்துவச்சாலையில் ஊதியம் பெற்றுத் தொழில்கற்கும் மாணவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார். அடுத்த ஆண்டு இயைபு நூற் (Chemistry) பரிசு பெற்றார். மாலைக்காலங்களில், மற்ற மாணவர் விளையாட்டிலும் வேடிக்கைகளிலும் காலங்கழித்துவந்தனர். இவரோ தம் அறையில், நூற்பயிற்சியிலேயே கருத்தூன்றி வந்தனர். மாலை கழிந்து இரவானபின் விளக்கினொளியில் படித்தனர். 'நுண்காணி' (Microscope) கொண்டு பல பொருள்களை ஆராய்ந்துவந்தனர். இவர் நுண்காணியில் உற்று நோக்கிக்கொண்டிருக்கும்போது, இவரறையின் பலகணியின் கண்ணாடிக் கதவின் மீது, அத்தோற்றத்தின் நிழல்-விழும். தெருவழியே சென்றவர் அந்நிழலைக்காண்பது இயல்பாயிற்று. அக் காட்சியைக் கண்ட மற்றமாணவர் "தலையும் நுண்காணியும்" என்ற படம் தோன்றிவிட்டது எனக்கூறி நகைத்தனர். 'தலையும் நுண்காணி'யும் என்ற இடுபெயரால் ஹக்ஸ்லி அழைக்கப்படலாயினர். *1845*-ம் ஆண்டில், தம் மருத்துவத் தேர்ச்சிச் சோதனையில் மேன்மையுடன் (With honours) தேறினர். 'இளமருத்துவனர்' (Bachelor of Medicine) என்ற பட்டத்தையும் பெற்றார். உடல்நூலிலும் (Physiology) உடற்கூற்று நூலிலும் (Anatomy) முதல்வராய்த் தேறினமையின், அவற்றிற் கான பதக்கங்களையும் பெற்றார். இதன்பின் மருத்துவனர் பணியை நாடி அலையலானர். *1846*-ம் ஆண்டில் கப்பற்படையின் ஆட்சித் தலைவரைக் கண்டார். அவரும் இவர் தேர்ச்சிச் சோதனையில் முதல்வராய்த் தேறினமையின், திறனுடைய மருத்துவனர் ஆவார் என்று கருதி, கப்பற்படையில் பணிசெய்யும் துணை மருத்துவராய் (Asst Surgeon) அமர்த்தினர். நியூகினி (New Gunoea), என்ற தீவின் கரையில் சில அளவுகள் செய்ய அனுப்பப்பட்ட 'ராடில் ஸ்னேக்' (Rattle Snake) என்ற கப்பலில் இவர் துணை மருத்துவராய்ச் சென்றார்.

(தொடரும்)

வித்துவான் ஔவை, சு. துரைசாமி பிள்ளை
தமிழ்ப் பேராசிரியர், அண்ணாமலைநகர்.

## சேரமான் மாந்தரம் பொறையன் கடுங்கோ.

இச் சேரமான் ஏனைச் சேரமான்களைப்போல அத்துணை வீறு பெற்றவனென்று சொல்லுவதற்கில்லை. இவனைப் பற்றி அகத்திற் காணப்படும் ஆசிரியர் பரணர் பாட்டு (142) ஒன்று தவிர வேறு இல்லை. மாந்தரம் பொறையன் என்பதனால், ஒருகால் இவன் சேரமான் மாந்தரஞ் சேரலிரும் பொறை முதலியோரது குடியிற் பிறந்தவனாகலாம் என்று கருதுபவரும், பாலை மருதங்களைப்பாடிய கடுங்கோக்களின் குடியிற் பிறந்தவனாகலாம் என்று கருதுபவரும் உண்டு. ஆயினும், இவன் சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் செங்குட்டுவன் முதலியோர்க்கு முற்பட்டவனாகும்.

ஆசிரியர் பரணரால் இவனது வள்ளன்மை சிறப்பித்துக் கூறப் படுகின்றது. புறநானூற்றிலும் பதிற்றுப் பத்திலும் இவனைப்பற்றி யொரு குறிப்பும் காணப்படாமைக்கு ஏது ஒன்றும் தெரிந்திலது. பலருடைய வரலாறுகளைப் பல பாட்டுக்களிற் குறித்தேகும் இயல் பினராகிய பரணர் இவனது வள்ளன்மையை மட்டில் விதந்தமையின், வரலாற்றின் சிறப்புச்செய்தியாக இவனால்பிறிதொன்றும் நிகழ்த்தப் படவில்லை யென்றுதான் நாம் துணியவேண்டும்.

"இலமலரன்ன அஞ்செந் நாவின்
புலமீக் கூறும் புரையோ ரேத்தப்
பலர்மேந் தோன்றிய கவிகை வள்ளல்
நிறைய ருந்தானை வேல்போர் மாந்தரம்
பொறையன் கடுங்கோப் பாடிச் சென்ற
குறையோர் கொள்கலம் போல
உவவினி வாழிய நெஞ்சே" (அகம். 142)

என்ற இதன்கண் "அஞ்செந் நாவின் புலமீக் கூறும் புரையோர்" என்றது புலவர் பெருமக்களை யாகும். இப்பெருமக்கள் உரையாலும் பாட்டாலும் புகழ்ந்தேத்த வாழும் வாழ்க்கை விழுமிய வாழ்க்கை என்பது அனைவர்க்கும் ஒப்ப முடிந்த தொன்று. மேலும் இவனைப் "பலர் மேஎந்தோன்றிய வள்ளல்" என்றதனால், "தங்குறை நீக்கி யும் பிறர் குறை தீர்த்தும் நாடாள்வதே யரசாட்சி" எனச் சான்றோர் ஒருவர் (யா. வி. மேற்) கூறியாங்கு நாடாண்டான் இக் கடுங்கோ என்றும் அறிகின்றோம். இவ்வண்ணம், "நாடு வளம் பெருகக்கிளை குடியோம்பி ஆட்சிபுரிந்த இவ்வேந்தர் பெருந்தகையின் கொடைச் சிறப்பை, "கடுங்கோப் பாடிச்சென்ற குறையோர் கொள்கலம் போல உவவினி வாழிய" என்றும், "கவிகை வள்ளல்" என்றும் பாடுகின்றார்.

## மருதம் பாடிய இளங்கடுங்கோ.

இச் சேரமான் "பாலை பாடிய பெருங்கடுங்கோவின் தம்பி யென்று ஊகிக்கப்படுகின்ருர்," என நற்றிணையுரைகாரர் கூறுகின்ருர். இவர் பாலை பாடிய சேரமானைப் போல மருதம் பாடினமையின், இவர்க்கு இச் சிறப்புப்பெயர் வந்துளது.

பருவூர் என்னு மிடத்து இரு பெருவேந்தர் போர் செய்தழிந்த போது அவர்தம் படையி லிருந்த களிறுகளை அஃதை என்பாள் ஒருத்தியின் தந்தையரான சோழர்கள் கவர்ந்துகொண்டு வந்தனர். அச் செய்தி நாடெங்கும் பரவியிருந்தது. அவ் விருபெருவேந்தரும் இன்னுரென்பது தெரியவில்லை. "அஃதை தந்தை அண்ணல்யானை அடுபோர்ச் சோழர்' (அகம் 96) என்று இவர் கூறுவதால், அவர்களும் சேரரும் பாண்டியரு மாதல்வேண்டுமெனக் கருதி அகநானூற்றுரைகாரர் "சேரபாண்டியரென்னும் இரண்டு பெரிய வேந்தரும்" என்று கூறுகின்ருர்.

அஃதை யென்பவளின் மெய்ந்நலத்தை வியந்து, "செம்பொற் சிலம்பின் செறிந்த குறங்கின், அங்கலுழ் மாமை அஃதை" என்கின்ருர் அதனுல் இவளைக் கொள்வதுகருதி இரண்டு பெருவேந்தர் போருடற்றி யிருத்தல்வேண்டுமென்று கருதலாம். அவர்கட்கு மகட்கொடை மறுத்த காரணத்தால் அவள் தந்தையரான சோழர் அவரோடு பொருதழித்தனர். மைந்து பொருளாக மண்கவர்வது குறித்து வந்திருப்பின் அவர்தம் பெயரை எடுத்துமொழிந் திருப்பர். அன்றியும், இவர் சேரபாண்டியர் கீழ்நின்ற சிற்றரசர்களாயின் "இருபெருவேந்தரும்" என்று கூறு ராதலின், இப் பேரரசர் மகட்கொடை வேண்டினவரே என்பது தெற்றென விளங்கும். கல்லாடனுர் முதலியோர் பாட்டுக்களிற் காணப்படும் "அஃதை" யென்பது ஒரு கொடையாளியைக் குறிக்கின்றது. "அகவுநர் பெருமகன் அமர்வீசு வண்மகிழ் அஃதை" (அகம் 113) எனச் சான்ருேர் பாராட்டுதல் காண்க. ஆகவே, அஃதை யென்பது ஆடவர் மகளிர் இருபாலார்க்கும் வழங்கிய பண்டைப் பெயர்வகையுள் ஒன்று எனக் கொள்ளலாம்.

மருதம் பாடிய இளங்கடுங்கோ மருதத்திணையில் தலைவற்கு வாயில் மறுக்கும் வகையால் தோழி கூற்ருகப் பாட்டொன்று பாடியுள்ளார். தலைமகன் புறத்தொழுகுமிடத்துப் பரத்தையரொடு துணங்கையாடி விழாவயர்கின்ருன் என்பது கேட்டிருந்த தோழி, தலைமகன் வாயில் வேண்டிவிடுத்த பாணனுக்கு வாயில் மறுக்கின்றவள், சிறைப் புறத்தானுக நின்ற தலைமகன் கேட்ப, தலைவியை முன்னிலைப் படுத்தி, 'அன்னுய், நம் தலைமகன் குழையும் கோதையும் தொடியுமுடையனுய் விழாவயர்களத்து மகளிரொடு துணங்கையாடுமிடஞ் சென்று கைப்பிடியாகக் காண்பேமெனக் கருதிச்சென்றேன்; அவன் பெண்ணுடைதரித்து என் எதிர்ப்பட்டான்; யான் 'கேட்போர் உளர்கொல் ?' என்றேன். அவன், தான் பெண்ணென எனக்குணர்த்துவான்போல, 'யாண து பசலை, காண்' என்றனன். அவன் 'செறுநரும்

விழையும் செம்மலோன்' ஆதலின், என் அறியாமை மிகுதியால் வணங்கி விடை பெறுது 'நாணிலே எலுவ' என்று வந்திசினே" (நற் 50) என்று கூறுகின்ருள். இதன்கண் தலைவன் "சேறு நரும் விழையும் செம்மலோன் என" தோழி யறிந்து வைத்தும், அவற்குரிய வழிபாடு செய்யாமையாகிய குற்றத்தைப் போற்றல் வேண்டும் என்பது குறித்து, "சிறுமை பெருமையிற் காணுது துணிந்தே" என்று சொன்ன சொற்றொடர் இவ் விளங்கடுங்கோவின் விரிந்த மனப் பயிற்சியைப் புலப்படுத்துகின்றது.

இவர் பாடியதாக அக நானூற்றில் காணப்படும் "நறவுண் மண்டை" (96) என்ற மருதப் பாட்டு, தோழி வாயில் மறுப்பது பொருளாகவே அமைந்துள்ளது. இதன்கண் தோழி தலைவனை நோக்கி, "ஊர ஒண்தொடியாயத்துள்ளும் ஒரு குறுமகளை நீ நயந்து கொண்டனையென்ப; அது, சோழர்களிறு கவர் கம்பலை போலப் பலர் வாய்ப்பட்டு அலராகின்றது, காண்" என்கின்ருள். அலரின் சிறப்பைக் கூறுதற்குத்தான் அஃதையின் பொருட்டு இருபெரு வேந்தரும் பொருதழிந்தவழி, அவர்தம் களிறுகளை அவள் தந்தையரான சோழர் கவர்ந்த செய்தி உவமிக்கப்படுகின்றது. இதன்கண், பரத்தையர் சேரிக்கண் குறுமகளொருத்தியைப் பாண்மகன் கூட்டக் கூடியின்புறும் தலைவன் செய்தியை உள்ளுறுத் துரைத்த திறம் இன்பம் தருவதொன்ரும்.

நறவுண்டு கலித்த இறவுமீன் துள்ளி நெற்கூட்டில் விழுதலுக்கு "பூட்டறுவில்"லை உவமம் கூறியதும், பொய்கைக்கண் படர்ந்த ஆம்பலின் அகன்ற இலை கொடியொடு பிணிப்புண்டு வாடைதுளக்குதலால் வீங்குவதும் நெகிழ்வதுமாயிருந்தது, "ஊதுலை விசைவாங்கு தோலின் வீங்குபு நெகிழும்" என்றதும் இவரது இயற்கையறிவின் ஒட்பத்தைப் புலப்படுக்கின்றன.

"கடல் கண்டன்ன" எனவரும் அகப்பாட்டையும் (176) இவர் தோழி வாயில் மறுக்கும் பொருளிலேயே அமையப் பாடியுள்ளார். இதன்கண் இவள் கூறும் கூற்று வேறு. "ஊர, வயலைக் கொடி கொண்டு ஆம்பல் முதலியன தொடுத்தமைத்த தழையுடுத்து விழவாடு மகளிரொடு நீ ஆடிய பொழுது நின் மாணிழைக்காதலி முன்கைக் குறுந்தொடி நின் மாலையில் தொடக்குண்ண, நீ அதனை விடுத்தாய்; ஆகவே, அவள் புலந்து நின்னோடு உடன்றனள் போலும். அவள் தன் முகத்து எழுதிய எழில் சிதைய ஏங்கி அழுது நின்னைக் காண வேண்டி ஊர் முழுதும் தேடித்திரிகின்ருள். அவள் "எம்போல், புல்லுளைக் குடுமிப் புதல்வர் பயந்து, நெல்லுடை நகர் நின்னின் றுறைய, என்ன கடத்தளோ" என்கின்ருள். நண்டின் கண்ணிற்கு வேம்பின் நனையை உவமித்து, "வேப்பு நனையன்ன நெடுங்கணீர் ஞெண்டு" என்றது இறும் பூது பயப்பதாம்.

## சேரமான் வஞ்சன்.

இச் சேரமான் ஆசிரியர் திருத்தாமனர் என்பவரால் பாடப் பெற்றவன். இவனைப்பற்றியாவது இப்புலவர் பெருமானைப் பற்றி

யாவது ஒரு குறிப்பும் கிடைத்திலது. இச்சேரமானைப் பற்றி ஏதேனும் தெரிய வேண்டின், இவர் பாட்டைக் கொண்டு தான் காண வேண்டும். இவர் பாட்டுள்ளும் ஒன்றே (புறம். 398) கிடைத்துளது; அதன் கண்ணும் சில அடிகள் சிதைந்திருக்கின்றன.

இப் பாட்டால் இவன் மிக்க திறல் படைத்தவன் என்று அறிகின்றோம். இவனது மூதூர் இவன்பால் நட்புடையவர் புகுதற்கு எளிதாயிருக்குமேயன்றிப் பகைவர்க்கு அரிது. புலி கிடந்து துஞ்சும் கன்முழை ஏனை மாவினங்கள் புகுதற்கு அச்சம் விளைவிப்பதுபோல, பகைவர்க்கு இவனது மூதூர் அச்சம் விளைவித்தது. "நகைவர் குறுகினல்லது பகைவர்க்குப். புலியினமடிந்த கல்லளை போலத்துன்னல் போகிய பெரும் பெயர் மூதூர்" என்பதனால் ஈதறியப்படும்.

இனி, இவனது கொடைத்திறம் புகழ்ந்து வாழ்த்தத் தொடங்கிய தாமனார், "உள்ளி வருநர் கொள் கலம் நிறைப்போய், எமக்கு நீ தள்ளா நிலையையாகுக" என்கின்றார். இவன் தன்னைச் சிறப்பித்த திறம் கூறலுற்று, "அவன் நிலையை நோக்க யான் மிக எளியவனுவேன்; என் வரவறிந்ததும், அவன் தானே என் சிறுமை கண்டு, அதனை அவ்வாறே கொண்டு இகழாது பெரிதும் உவந்து, விரும்பிய முகத்தொடு வரவேற்றான்; என் அரையில் இருந்த துரும்புபடு சிதாரை நீக்கி, 'புகை விரிந்தன்ன பொங்குதுகில்' தந்து உடுப்பித்தான். பொன் மண்டையொன்றில் தேறல் நிரப்பித்து யான் உண்ணத் தந்தான்; தான் உண்ணும் மண்டையில் இருந்து மான்வறைக் கருணையும், நல்லசோறும் எனக்கும் என் சுற்றத்தவர்க்கும்நல்கினன்" என்று விரித்துரைத்து மகிழ்கின்றனர்.

## சேரமான் இளங் குட்டுவன்.

சேரமான் கடல்பிறக் கோட்டிய வேல் கெழு செங்குட்டுவன், பல் யானைச் செல்கெழுகுட்டுவன், சேரமான் நம்பிகுட்டுவன் எனச் சேரமன்னர் பலர்குட்டுவன் என்னும் பெயருடன் காணப்படுகின்றனர். எனவே, இவரனைவரும், சேர நாட்டின் ஒரு பகுதியாகிய குட்ட நாட்டை ஆண்டமன்னர் குடிப்பிறந்தவரெனக் கொள்ளலாம். சோழியவேனதி திருக்குட்டுவன் என்பானொரு மலைநாட்டு வள்ளல் சோணாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக்குமரனாரால் பாடப்படுகின்றான். இவன் குட்ட நாட்டிற் பிறந்ததனால் இப்பெயர் பெற்றுச் சோழ நாட்டுத் தானைத் தலைவனாய் ஏனதியாயினவன். ஏனதி என்பது தானைத் தலைவர்கட்குப் பண்டை யரசரிட்ட சிறப்புப்பெயர். ஏனதி திருக்குட்டுவன் எனப் படுதலால், குட்ட நாட்டை யாண்ட சேரமன்னனல்லன் என்று அறிய வேண்டும். ஆயினும் இவன் புலவர்கட்குப் பெரும் பொருள் நல்கி, மிகுபுகழ் பெற்ற பெருந்தகையென்பதை மறத்தலாகாது. *

---

*எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரன் ஒரு கால் இவன்பால் சென்று, இத் திருக்குட்டுவனது தந்தை தேரேறி வஞ்சி குடிப்போருக்

குட்டுவருள் இவ்விளங் குட்டுவன், இளங்கடுங்கோ இளஞ்சேரலிரும் பொறைகளைப் போல இளவரசனுய் இருந்த காலத்தே புலவர் பாடும் புகழ் பெற்றவனுவான். இச்சேரமான் பாடிய பாலைப் பாட்டொன்று அகநானூற்றில் (153) காணப் படுகின்றது. வேறே இவர் பாடிய பாட்டு யாதும் பிறதொகை நூல்களில் இல்லை.

தன் மகள் தலைவனுடன் புணர்ந்து போகிய போது, மகட் போக்கியதாய், செவிலிபாற் சொல்லி வருந்துகின்ற துறையமைந்த இவர் பாட்டு இவரது புலமை நலத்தை நாம் உணரச் செய்கின்றது. தன் மகள் போகிய சுரத்தின் கடுமையும், அவள் சென்ற வழியின் அருமையும், அவளது மென்மையும் வகுத்துரைக்கும் இவனது சொல் வன்மை இன்பம் பயக்கின்றது.

செவிலி பால் தன் மகள் போகியது சொல்லிப் புலம்பும் நற்ருய் தொடக்கத்தே தன் மகளது இளமையும் மென்மையும் நினைந்து,

"நோகோ யானே நோதகும் உள்ளம் ;
அந்திங் கிளவி ஆயமொடு கெழீஇப்
பந்து வழிப் படர்குவளாயினும், நொந்து, நனி
வெம்பும் மன்; அளியள் தானே"

என்று புலம்புகின்ருள். இத்துணை மென்மையுடையாள், நும்மைப் பிரியும் வன்மை யெங்ஙனம் பெற்ருள்? தன்பிரிவால் நீவிர் வருந்தும் வருத்தத்தை அவள் நினையாளோ? என்பன போன்ற வினக்கள் உடனே கேட்போர் மனத்து எழுமன்றே! அவற்றிற்கு விடைகூறுவாள் போல, "அவள் மிக்க மென்மையுடையளாகவே இதுகாறும் இருந்தாள். இப்பொழுதோ அவ்வன்கணுளனுல்(தலைமகனுல்)வன்மையூட்டப் பெற்று நமது துன்பத்தை உட்கொள்ளாது, அவன்பின்னே செல்வாளாயினள் என்று சொல்லுவாள்,

"நனி வெம்பும்மன் ; அளியள்தானே; இனியே
வன் கணுளன் மார்புற வளைஇ
இன்சொற் பிணிப்ப நம்பி, நங்கண்
உறு தரு விழுமம் உள்ளாள்"

என்கின்ருள். இதன்கண் அவ்'வன்கணுளன்' தலைமகட்கு வன்மையூட்டிய திறத்தை, "மார்புற வளைஇ, இன் சொற்பிணிப்ப, நம்பி"

---

கெழுந்து போருடற்றியதைப் பாடினர்; இவன் அதற்கு மகிழ்ந்து, இவரது புலமையை வியந்து 'வெஞ்சின வேழம் நல்கினன். அவ்யானைபகைவரைக் 'கொன்று சினந்தணியாப் புலவு நாறும் மருப்பின் வெஞ்சின வேழ' மாதலின், அஞ்சி வேண்டாவென அவர் அதனைப் பெயர்த்தனர்; அவன், தான் தந்தது சிறிது என வுணர்ந்து, அவரது வரிசையறியாது போனதற்குத் தானே நாணிப் பிறிதுமோர் பெருங் களிறு நல்கினன். அதனுல், "உயர்மொழிப் புலவீர், வலிதுஞ்சு தடக்கை வாய் வாட் குட்டுவன், வள்ளியனுதல் வையகம் புகழினும் உள்ளல் ஓம்புமின்" என்று கூறிப்பின், தான் பரிசில் பெற்ற வரலாற்றையும் கூறி, முடிவில், "இரும் பேரொக்கல் பெரும் புலம் புறினும், துன்னரும் பரிசில் தருமென, என்றும் செல்லேனவன் குன்று கெழு நாடே" (புறம். 394) என்று இக் குமரனுர் பாடலாயினர்.

என்பதனால் மிக அழகுறச் செப்புகின்றாள். அவளை நினைக்குந்தோறும் தன் மனத்தெழுந்து மிகும் துயரத்தை "நங்கண் உறுதரு விழுமம்" என்று சொல்வது மிக்க நயம் தருகிறது.

நின் மகளொடு சென்றவனை நீவிர் வன்கணாளன் என்கின்றீராதலால், வழியில் உளவாகும் ஏதத்தை அவன் தன்வன்கண்மையால் போக்கி, அவட்கு இன்புறுத்துவனன்றோ? என்றெழும் வினாவிற்கு விடையிறுப்பாள்போல, "வழியில் ஆறலைப்போராலும் விலங்குகளாலும் அவட்கு ஏதமுண்டாகா தென்பது எனக்குத் தெரியும்; அவன் வன்கணாளன் மற்று, செல்லும் வழியின் அருமை நினைந்தே என் நெஞ்சம் அவலமுறுகின்றது" என்று அவ் வழியின் இயல்புகூறத் தொடங்கி,

"தெறுகதிர் உலைஇய வேனில் வெங்காட்டு
உறுவளி யொலிகழைக் கண்ணுறுபு தீண்டலின்,
பொறிபிதிர்பு எடுத்த பொங்கெழு கூரெரிப்
பைதறு சிமையப் பயநீங் காரிடை"

என்று வருந்துகின்றாள். இதன்கண் "தெறுகதிர் உலைஇய வேனில்" என்றதனால் வேனில் வெம்மையும், "உறுவளி ஒலி கழைக்கண்ணுறுபு எடுத்த பொங்கெழு கூரெரி" என்றதனால் மூங்கில் தம்முள் உராய்வதனால் எரி பிறந்து மிகுதலும் "பைதறு சிமையப் பயம் நீங்கு ஆரிடை" யென்றதனால் வழியின் செலவருமையும் கூறுகின்றாள்.

இவ்வாறு அவள் உள்ளத்தே தன்மகள் சென்ற வழியின் வெம்மையும் அருமையும் தோன்றவே, அவற்றிற்கு ஆற்றுதலில்லாத மகளது மென்மை நினைவிற்கு வந்தது, அதனால் உளம் புழுங்கி, "நல்லடிக்கு அமைந்த வல்ல; மெல்லியல் வல்லுநள் கொல்லோ?" என்று கண் கலுழ்கின்றாள். அவள் மனக்கண்ணின் முன், வழிகிடந்த சுரத்தின் கடுமையும் புலனாகிறது. அதனை, "எல்லி, ஓங்கு வரையடுக்கத்து உயர்ந்த சென்னி

"மீனெடு பொலிந்த வானின் தோன்றித்
தேம்பாய்ந்து ஆர்க்கும் தெரியிணர்க் கோங்கின்,
காலுறக் கழன்ற கட்கமழ் புதுமலர்
கை விடு சுடரில் தோன்றும்
மைபடு மாமலை விலங்கிய சுரனே"

என்று சொல்லுகின்றாள்.

இது கேட்ட செவிலி, அவள் கூறிய, "தெரியிணர்க் கோங்கின், காலுறக் கழன்ற கட்கமழ் புதுமலர், கைவிடு சுடரில் தோன்றும்" என்றதையே எடுத்தோதி, "காற்றுவீச இணரினின்றும் கழன்று வீழ்ந்த புதுமலர் சுடர்போல ஒளிவிட்டாற்போல, 'நாணினும் கற்புச் சிறந்தன்று' என்று முதுக் குறையும் பருவத்திற்கு முன்னரே முதுக்குறைந்து, தனது பிறந்த இல்லினை நீங்கித் தலைமகனுடன் சென்ற தலைமகளின் செயல் புகழற்குரிய சிறந்த கற்பொழுக்கமாயிற்று" என்று கூறித்தேற்ற, நற்றாயும் மனம் தேறினாள். இச் செய்தியை உய்த் துணரவைத்த இவரது புலமை நலத்தை நோக்கின் இவர் நல்லரசு நடாத்தி, நல்லோர் பரவ வாழ்ந்த பெருந்தகை யென்பது தெளிய விளங்குகிறது.

(தொடரும்)

## பேராசிரியர், உயர்திரு : T. C. சண்முகம்பிள்ளை வரலாறு.

திரு. K. சோமசுந்தரம்பிள்ளை B.A., B.L., அவர்கள், தஞ்சை.

உயரிய நூல்களின் அரிய நுண்பொருள் நலங்களை மெய்யுணர்விற் கண்டு இன்புறுதலாகிய செவ்விய புலமை வாழ்க்கைக்கு எடுத்துக் காட்டாக நின்ற பீடுடையார் தஞ்சைப் பேராசிரியர் திருமிகு : T. C. **சண்முகம்பிள்ளையவர்கள்** ஆவர். ஆங்கில இலக்கியம் படிப்பிக்கும் மதிவலிமிக்க இம்முதுபுலவர், தம்மை ஒரு புதிய சாலையின் காவலராகக் கருதித் தம்மாணுக்கர்களை அச்சாலையைப் பார்க்க வந்தவராகக் கொண்டு, அவர்களை அச்சாலையுள்ளழைத்துச் சென்று அங்கிருக்கும் உயர்நிலைப் பாவலர்தம், ஆழ்ந்த நினைவிற்கண்டு வைத்த விழுப்பொருள் மணிகள் இன்னவை, இவைகளின் இயலொளி இத்தன்மைய என்றிவ்வாறு வழிகாட்டி அறியச்செய்தலையே தம் அரிய குறிக்கோளாகக் கொண்டுள்ளார். இவ்வண்ணம் மாணவர்களுக்கு இயல் நூலிலும் இலக்கண நூலிலும் திறம்படக் கற்பிக்கும் இவர் தம் ஆற்றலையும், கவின்பொழியும் கல்வித்திறமையையும் நன்குணர்ந்த பேரறிஞர்கள் இவரைப் பாராட்டி 'ஆங்கிலப்புலி' (Tiger of English) எனும் சிறப்புப் பெயரினைச் சூட்டி வழங்கினர். இவர் புகழுடம்புற்றுப் பல்லாண்டுகளாகியும் இன்னும் ஆங்கிலப்புலி என்றால், தஞ்சை திருமிகு, T. C. **சண்முகம்பிள்ளையவர்கள்** என்னும் நினைவு சென்னை மாகாணத்திலுள்ள நாவலர்கள், கல்விப்பயிற்சி முறைகளில் தேர்ச்சிபெற்ற ஆசிரியர்கள் முதலானோர் எண்ணத்தில் சிலையெழுத்தாக விளங்குவது குறிப்பிடத் தக்கதாம், நூலாசிரியரது உண்மைக்கருத்துக்களையும் நூலின் முடிபொருள்களையும் செப்பனிட்டு உரைவளம் மலிய எடுத்தோதும் இவர் தம் அருமையும் பெருமையும் இத்துணையவெனக் கூறல் இயலாது. இத்தக்கோரது சீர்த்தி கருவிலே வாய்த்த திரு என இவர்தம் பெருமை இருந்தவாறு காணும் சிறப்புடைய மக்கள் கூறியும் கருதியும் அமைவர்.

அறிவுரம் பெற்றுயர்ந்தோர் பலராலும் உவந்து பாராட்டப் பெற்ற நிலையில் பொலிவுற்றுத் திகழ்ந்த இப்பேரறிஞர் தம் மனத்திற் கொண்ட கருத்துக்களை, கல், சுதை, மண் முதலியன கொண்டு உருப்படுத்திக் காட்டும் சிற்பம் வல்லோர் திரு. **குழந்தைவேற் பிள்ளை** என்பாரின் மகனவர். தஞ்சையில் இவரது நற்குடி வழி வழியாக அறிவும் ஒழுக்கமும் ஒப்புரவும் ஓங்கியது. வேளாளகுலத் தலைவரான திரு. **குழந்தைவேற்பிள்ளை** தம் தொழில் வழியாகக் கிடைத்த சிறிய வருவாயைக் கொண்டு எளிய வாழ்வு வாழ்ந்து வந்தார். அன்பும் அறமும் தூயவொழுக்கமும் பூண்டு, கிடைத்ததைக்கொண்டு மனமுவந்து மனைவாழ்வு தழைக்க இவர் மாசற வாழுங்கால முருகனார் அருளால் மனையறத்திற்கு இன்பக்கனியாக நம் சண்முகச் செல்வனார் (1845) **குரோதி ஆண்டு பங்குனித்திங்கள் பத்தாம் நாளில் தோன்றினர். இவர் குழவிப் பருவத்தில் சிறு தேருருட்டி ஓடி ஆடி விளையாடிப்**

பெற்ரேரோடு கூடிக்கலந்து வளர்ந்து இன்புற்றுவரும் காலத்தில், இவரைப் பள்ளியில் வைத்து நடுக்குறுத்தித் துன்புறுத்துதல் இன்னு ரின் உடல் வளர்ச்சிக்கும் உள்ளப் பெருக்கிற்கும் பெருங் கேடு நேரு மென்று இவர் தம் பெற்ரேர்கள் கருதி இவருக்கு ஏழு வயதாகியும் இவரைப் பள்ளியிற் சேர்க்க இணங்காதிருந்தனர். மற்று வறுமைப் பாவி அப்பெற்ரேரது கருத்துக்கு முரண்பாடாக நின்றதில்லை. அக்காலத்தில், இளம்வயதில் பிள்ளைகளைக் கற்பிக்கும்படி அரசிய லார்கட்டளைப் படுத்துவது இல்லை. பின்னர் எட்டு முதல் பன்னி ரண்டு வயதாமளவும் இவர் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் தமிழினை மட்டும் கற்றுவந்தார்.

சண்முகச் செல்வர் தமிழில் கற்பவையாவும் கசடறக் கற்றுக் கற்றவாறே ஒழுகி வந்தனர். கந்தப் பெருமானருளால் கலையறிவு வளர்பிறைபோல் வளரத்தொடங்கிற்று. அடக்கம், அமைதி, அகக் களிப்பு, தெளிவு முதலிய இவரது தன்மைகள் அனைவரது உள்ளத் தையும் கவர்ந்ததனுல், இவர் தந்தையாருக்கு உயிர்த்துணையாகிய உரவோர் **சிதம்பரம்பிள்ளை** என்பார் இவருக்கு ஆங்கிலம் கற்றுக் கொடுக்க முன்வந்தார். இவரடிக் கீழிருந்து செவிவாயாக அவரியம் பிய அறிவுரையாவும் பருகித் தாய் தந்தையர் உள்ளம் உவக்க ஓராண்டு பயின்றுவந்தார். பின்னர் சிதம்பரம் பிள்ளை இவரை, தம் தலை மாணுக்கர் **அ. நாராயணசாமி பிள்ளை** பால் பாடங்கற்றுக் கொள்ள விடுத்துப் பொருள், இடவளங்களை நாடி, கண்டியூர் சென் ருர். பின்னர் சிறந்த அறிவுப் பணிபுரியத் துணிந்த **நாராயணசாமி பிள்ளை**பால் இவர் பாடங்களை இலவசமாகக் கற்று உவந்துவரும் நாளில் அவருக்குப்பண்டை நன் மாணவர்முறையில் மனமுவந்து பல தொண்டுகளும் இயற்றி வந்தார். இவர்பால் நூல்களைக் கற்றுவருங் காலை, நூல்களைக் கற்றலே கல்வியெனக் கருதாது இயற்கை அழகெல் லாம் கண்டும் கேட்டும் உணர்ந்து வருவாராயினர். அக் காலத்தில் கற்போரின் துன்பநிலை அருவருக்கத்தக்க நிலையிலிருந்ததனுன், உயர் தரக் கல்வி கற்போர் சிறு தொகையினராயிருந்தனர்.

ஆங்கிலச் சுவையில் இன்பும் அன்பும் மீதூர 1860-ல் மாணுக் கர் சண்முகம் மகர் நோம்புச் சாவடியிலிருந்த, S. P. G. பள்ளியில் முதன் முதலில் **நாராயணசாமி பிள்ளையின்** அரிய உதவியினுல், **பிராங்கர்ச்ட்** (Mr. Bronkhurst) என்ற ஆசிரியரின்கீழ் 3-வதுவகுப்பில் சேர்ந்து படித்துவந்தார். இப்பாடசாலையின் ஆசிரியர்கள் யாவரும், யூரேசியர்கள். (Eurasians) இதன் தலைமை ஆசிரியர் பெர்சிவல் (Mr. Perceival) என்பார். இவர் ஒரு ஐரோப்பியர். ஆசிரியர்கள் யாவரும் தம்பணி புரிவதற்கும் அணுவும் கூலி விரும்பார். கொடுக் கினும் கொள்ளார். இப்பாடசாலையில் ஏனைய பாடசாலைகளைப் போலல்லாது மாணவர்கள் ஆசிரியர்களுக்குக் கீழ்ப்படிந்து பாடசாலை ஒழுங்குகளுக்கு அமைந்து நடந்துவந்தனர். தம் நலமற்றுக் கலையில் வல்ல இவ்வாசிரியர்கள்பால் **சண்முகச்செல்வர்** பழகி ஆங்கில மொழி யில் வழுவற நினைத்தலிலும், நினைத்தவற்றை வழாது உரைத்தலிலும் வன்மைபெற்ருர். மற்றும் தனக்குப் பாடுபடுவதைவிடப் பிறர்க்குரிய ராக இருந்து பாடுபடுவதால் நேரும் இன்பம் பெரிதெனவும் அறிந்து மகிழ்ந்தார்.

ஒரு நாள் மூன்றாவது வகுப்பில் ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்புக்காக ஒரு தேர்தல் நடைபெற்றது. அதில் ஆசிரியர்கள் சிதம்பரனாராலும் நாராயணனாராலும் புகழ்ந்து போற்றப் படும் சண்முகனார் ஏனைய மாணாக்கர்களைவிட உயர்ந்து விளங்கினமையின் வகுப்பு ஆசிரியர் இவரது நுண்ணறிவினை வியந்து இவர்பாற் பேரன்பு பூண்டு, தலைமை ஆசிரியர் பெர்சிவல் துரை மகனாரிடம் இவரைப்பற்றி மிக்க வுயர்வாகக்கூற, பெர்சிவல் துரைமகனார் இவரை முறையானே நான்காம் வகுப்பிலன்றி 5-ம் வகுப்பிற் சேர்த்து அல்லன் (Mr. Allan) என்ற துரைமகனாரிடம் படிக்கும்படி உத்தரவிட்டார். அடுத்த ஆண்டில் அப்பள்ளியில் இறுதியாகிய 6-ம் வகுப்பில் சேர்ந்தார். இங்கு இலக்கியம் முதலிய பல துறைகளில் ஐரோப்பிய ஆசிரியர் மூலம் பெரும் புலமை பெற்றார். இவரது புலமையை வியந்து சென்னைக் கிறித்துவக் குருக் குழுவினர் (Madras Diocesan committee) இவருக்கு (Scholarship) உதவிச்சம்பளமாகத்திங்கடோறும்மூன்றுவெண்பொன் அளித்துவந்தார்கள். இதனைக்கொண்டு இவர் முதன் முதலில் புத்தகங்களை வாங்கிப் படிக்கத்தொடங்கினார். அதுவரையில் இவர் பள்ளிக்கூடத்து மாணவர்களிடமிருந்து புத்தகங்களைப்பெற்று அவற்றினின்றும் பாடங்களைத் தனியே எழுதிப் படித்துவந்தார். படிப்பதற்காகச் சொந்த புத்தகங்கள் கிடைப்பதற்கரிதாகையால், கிடைத்த புத்தகங்களைச் செவ்வையாகப் பயிலவேண்டிய இன்றியமையாமை இவருக்கு ஏற்பட்டது ஈண்டு அறியத்தக்கது. இவர் 6-ம் வகுப்பு படிக்குங்காலையில் பெர்சிவல்துரை மகனார் மாற்றப்படவே, மார்சு (Mr. Marsh) என்பவர் பாடசாலைக்குத் தலைமை ஆசிரியரானார். இது போதுதான் இப்பாடசாலை சீர்திருத்தப்பட்டுப் பெரியருஞ் சிறியரும் செல்வரும் வறியரும் கல்வி பயிலுதற்கு வேண்டிய நிலையில் அமையப் பெற்றது. மற்றும் மாணவர்கள் வளமுற வாழ்தற்கு உதவும் கல்வி நன்றாகப் போதிக்கப்பட்டது. மார்சு (Mr Marsh) துரைமகனாரின் அருந்திறலினால் S. P. G. பாடசாலை, கல்லூரியாக அலர்ந்தது. இப்பள்ளிக்கூடத்தினின்றும் பள்ளியிறுதி வகுப்புத் தேர்வுக்காக முதன் முதலில் பல மாணவர்கள் அனுப்பப்பட்டனர். அதில் அறுவர் தேறினர். அவர்களில் ஒருவர் நம் சண்முகச்செல்வர். இது சமயம் 30 வெண்பொன் ஊதியம் பெற்ற ஆசிரியர் டிரட்வின் (Trutwein) என்பார் இறந்துபடவே, மார்சு துரைமகனார், அவருக்குப் பதிலாக, தேறின அறுவரும் ஐந்து ஐந்து வெண்பொன் பெற்றுக்கொண்டு அவர் வேலையினைப் பார்க்கும்படி, சென்னைக் கிறித்துவக் குழுவினருக்கு (Madras Diocesan Committee) எழுதிக்கேட்க அன்னாரும் அதற்கிணங்கவே, சண்முகச் செல்வர் F. A., வகுப்பு படித்துக்கொண்டே அதனோடு ஆங்கில ஆசிரியராகவும் திகழ்ந்தார். இவ்வமயம் தான், முத்துக்குமாரப்பனார்(பிற்காலத்தில் S. P. G. கல்லூரியில் கணிதத்தின் முது புலவர்) இவர்பால் ஆங்கிலம் படித்து வந்தார். சிறந்த ஆசிரியப் பணியிலிருந்தேயும், இவர் அதனோடு F. A., வகுப்புக்குரிய பாடங்களைப் பயில்வதில் இணையற்றிருந்த பேரார்வம் எக்குறையுமின்றிச் சிறப்பாகத் தேர்ச்சிபெறும் பெருமையினை அளித்தது.

வாழ்வு இன்ப துன்பமெனும் மேடு பள்ளங்கள் மேவிவருதலால், அங்ஙனம் வரும் வாழ்க்கையில் பெரிதுமேவிய துன்பங்களால் இவருக்குப் பொருந்திடும் அல்லலுக்கெல்லையில்லை. ஒருகால் இவரது மனைவாழ்வில் மங்குல் படரததொடங்கிற்று. குடும்பம் பொருளின்மையால் இடருற்றது எனினும், இவர் வாழ்வின் மேடுபள்ளங்களை ஒப்ப நினைத்துப் பொறுமைப் புன்னகையுடன் நடந்து வறுமையினை நீக்கி வாழ்வை எளிதாக நடத்தவும் நல்ல உழைப்பும் பிழைப்பும் உண்டாக்கிக் கொள்ளவும் வகை அறிந்தாராயினர். தாய் தந்தையரை இழந்தார்; உடல்நலங் குன்றினர். இவரது உள்ளலர்ந்த அறிவின் விரிவும் தெளிவும், பரந்த நோக்கின் பான்மையும் கூர்ந்தறிந்த மார்சு துரைமகனர், இவர் உடல்நலங் குன்றியிருப்பதை அறிந்து, இவரது இல்லம் ஏகி, இவரைத்தேற்றி, 'மானிட மரபு முழுவதும் ஒரு தொடர்பாய் விளங்குவதனுன், தூய மனத்தினுன் இறைவனுடன் உறவுகொண்டு வெளிவேடங்களிலும், வீண் சடங்குகளிலும் மனதை நீ செலுத்தாதே; உள்ளத்தினின்றே மனிதன் வளர்கிருன். நோதல் தன்னுறுதியின்மையினைக் குறிக்கும்; உன்னை நீ நம்பு; பண்பொடு வாழ்வாய். மகிழ்ந்துறைக! அஞ்சேல்!' எனக் கூறிச்சென்ருர். இக்கூர்மதியாளரின் பொது விதியாகிய குறிக்கோள் சண்முகச் செல்வனர்பால் உயிர்பெற்று விளங்கியது. இவரது வாழ்க்கையையும் செம்மைப்படுத்தியது. இவரது மன உறுதி பெரிய கவலைச்சுமையை நீக்கியது. இவ்வறிவுரையினுன் ஆசிரிய நிலையில் நின்று இயற்றும் இவரது ஆராய்ச்சிகள், ஞான வாழ்க்கையினைத் தருவன ஆயின.

பேராசிரியர் சண்முகம் பிள்ளையின் கல்வி, விழுச்செல்வமாக விளங்கியது. அக்கல்வியால் அறிவின்செல்வத்தை, விரும்பி வந்தவர்க்கெல்லாம், இவர் வரையாது உள்ளம் உவந்தளிக்கும் வள்ளலாய்த் திகழ்ந்தார். பெருமிதம் தருவனவாகிய கல்வி, தறுகண், இசைமை கொடை இந் நான்கும் இவர்பால் சிறப்பாக அமைந்தன. இவர் பாரினுள்ள உயிர்கட்கு உபகரித்துப் பாரின் நடுவண் விளங்குவதொரு மேருமலைபோல் விளங்கினர்.

பொன்மேவு தஞ்சை புரிச் சண்முகவள்ளல்
நன்மேவு சற்குணத்தை நாடியே—மன்மேவு
மேரு மலைநாணுற்று மெய்கூனி யீசற்கையிற்
சாருற மேவிற்று சரண்.

என்ற அருமை வெண்பாச் செய்யுள் இவரது பெருமையினை நன்குணர்த்துகின்றது. கல்வியை மேருமலையொடு ஒப்பித்துப் பாராட்டுவதும் கவி வழக்கென்பது ஈண்டுணரற்பாலது. 'சீரளவில்லாத் திகழ்தரு கல்விச் செம்பொன்வரை' என்பது திருக்கோவையார்.

தேசுறு வடிவு உடையராய்த் தூய வெள்ளை அங்கியணிந்து, மாசறுதோற்றமும், ஒளியுறுகண்களும் களியுறுசிந்தையின் பொலிவும் திகழ நிற்கும் இப் பெரியாரொடு ஒருவர் அளவளாவுங்கால், அவர் தங்கக்கம்பி போன்ற குரலுடன் பேசரும் புலமையினுல் உளத்தன்பு

இனிக்கும் இனிய உறவினில் ஆழ்த்துவர். எடுத்த பொருளைச் செம்மையும் தெளிவும் தோன்றத் தேன் ஒழுக்கென எடுத்துரைப்பார். தம் முன்னிருந்து பேசுவோர் ஆற்றலை யிழுத்துக்கொள்ளும் ஆண்மையுடையார். எவருக்கும், அவரை மறுத்து முடிவுரை வழங்கல் இயலாததாகும். இவர் எதிருரை தெளிவுற மொழியுமிடத்தும் பிறரை மதித்தொழுகும் மாண்பினைக் காண்பதன்றி இவர்பால் செருக்கினைத் தினையளவும் யாவருங் காணார். பள்ளியில் ஆங்கில இலக்கியச் சுவையுணர்வு, மாணாக்கரிடை உதிக்கச்செய்யும் பணியில் இவர் கவனமற்ற சிலமாணாக்கரைக் கடிந்தாலும், அன்னார் பள்ளியை விட்டு வெளியேறுங்காலத்து அவர்களை ஒல்லையில் மதித்தொழுகும் மாண்பின் வனப்பு, காண்பார் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு விடுதல் திண்ணம். நெடும் பொழுது மேற்றிசை ஆங்கிலக்கலை வாணரையொப்பச் சொல்வளந் தோயச் சொற்பொழிவாற்றுவார். மாணவர்களது விடைத்தாள்களைத் திருத்துவதில் இவர்க்கிருந்த பழக்க முதிர்ச்சி ஒப்பற்றது. எப்பாலும்கோடாது நடுநின்று விடைத்தாள்களைத் திருத்தும் முறையும் இணையற்ற திறமையும் தகைமையும் கருதி, சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஆட்சிக் குழுவினர் இவருக்குப் பல்லாண்டுகளாகத் திருத்தாளர் வேலையை அளித்துவந்தனர்.

கல்வியாலாய பயனை உணர்ந்த சண்முகச் செல்வனார் கடைமாணாக்கர் மனத்திலும் பதியும்படித் திறம்படத் தெளிவாகத்தெரியும் அளவு வெறுப்பின்றிச் சொல்லி அவர் மனத்தினிற் பெரு வியப்பினை விளைவிக்கப் பாடுபடுவர். அவர்கள் மென்மேலும் கற்றலில் ஆர்வங் கொள்ளுமாறுள்ள பழக்கத்தையும் ஏற்படுத்துவர். ஒரு நாள் இவருக்கு வெறுப்பு உண்டாதற்கு நெடுநாளாகக் காரணாயிருந்த கடைமாணாக்கனுக்கு இவர்போதித்தது நன்றாகப்புலப்படவே அவன் எழுந்திருந்து 'எனக்குக்கூட இப்பாடத்திலெழும் சுவையின்பம் பெறுதலாய பயன் கை கூடிற்று' எனக் கூறினானாம். தனக்குள்ள உள்ளக் கிளர்ச்சியும் கல்வியின் ஆர்வமும் எத்துணையோ அத்துணையும் அம் மாணாக்கர்களிடையே பரவவிட அரும்பாடு படுவர். கற்பதில் மாணவருக்கு ஆர்வம் பிறக்க, மாணாக்கருடைய சிந்தனை, தொழிற் செய்ய இடமில்லாமல் யாவற்றையும் தாமே முதற்கண் இவர் சொல்லிக் கொடுத்துவிடுவதில்லை. மாணாக்கர்கள் தாமே ஆராய்ந்தறியும் வன்மையும் பழக்கமும் வழக்கமும் வாய்க்கப்பெறப் பெரிதும் கருதுவர். இவ்வாறு சொற் சிறப்பு பொருட் சிறப்புக்களை மாணவருக்கு எடுத்துக்காட்டித் தாமும் இன்புற்று மாணவரையும் இன்புறச் செய்தல் இவரது அரிய வழக்கம். இவ் வண்ணம் இவர் மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொண்டிருந்த பொழுது ஓர் நாள் (Rev. Blake) பிளேக் பாதிரியார் (கல்லூரித் தலைமை ஆசிரியர்) அவரறியாமல் நின்று அவர் விரித்துரைப்பவையாவும் செவி வாயாக ஆர்வமுடன் பருகிப் பண்புடன் தம்வயமிழந்து நின்றனராம். இவர் புலமைக் கலைச்செல்வமனைத்தையும் குறைவறக்கையாளும் பெற்றிமை வாய்ந்தவரென எல்லையில் மதிப்புகொண்ட பிளேக் பாதிரியார், அயர்ச்சி தரவல்ல இலக்கண உரைகளைத் துலக்க விரும்பித் தம்பால் வரும் மாணவர்களைக் 'கல்லூரியின் இலக்கண நிபுணர் சண்முகனார்

பால் (The Grammanian of the College) சென்று கற்றுத் தெளிக. அவரது மறுத்தற்கொண்ணு முடிவுரை அரியது' எனப் புன்முறுவலோடு கூறுவாராம்.

ஒரு நாள் இவரது தூய வெள்ளை அங்கியின் பொத்தான் கீழே நழுவி விழுந்துவிடவே, அதனை ஒரு மாணவன் இவரிடம் எடுத்துக் கொடுக்க, இவர் அதனைப் பரிவொடு வாங்கி, 'அப்பனே! காலணு கூடப் பெறுத இப்பொத்தானை உன் ஆசிரியருக்கு நட்டம் ஏற்படாத படி, கவலைகொண்டு எனக்குக் கொடுத்ததற்கு மனமகிழ்ச்சியடைகின்றேன். உனக்காக உன் தகப்பனர் அரிதிற் சம்பாதித்துக் கொடுக்கும் மாதச் சம்பளம் அவருக்கு நட்டமாகாதபடி உன்னைப் பாடங்களில் சிறப்பாகத் தேர்ச்சிபெற நான் எவ்வளவு அளவு பாடுபடவேண்டும். இதனை நீ நன் கறிந்து இனிமேலாவது நான் சொல்லிக் கொடுப்பதைக் கூர்ந்து நோக்கவேண்டும். நீ அவ்வாறு செய்து வருகிருயா என்று கவனிக்கவேண்டியது என் கடமையாகும்' என்று கூறினராம். இதனல் இந் நல்லாசிரியரிடத்தில் மாணக்கர்கள் ஒழுகும் ஒழுக்கம் எத்தன்மைத்தென்பதூஉம் மாணக்கர்கள் கல்வியையடைய இந்நல்லாசிரியர் உதவும் உழைப்பின் நேர்மையும் ஒருவாறு அறியற்பாலன.

பாடங்களின் விழுப் பொருள்களை மாணக்கர்கள் தம் மனோபாவனையால் அகக் கண்ணுற்கண்டு இடைவிடாது இன்புறச்செய்ய வேண்டுமென்ற எண்ணம் இவர்பால் என்றும் தூண்டுதலினன், இவர் பாடசாலைக்கு ஒரு நாளாவது காலந்தவறி வந்தாரென்பதற்குச் சற்றேனும் இடம் ஏற்பட்டதேயில்லை. இதனல் பிளேக் துரைமகனர் இவரைப் 'பள்ளிக்கூடத்துக் கடியாரம்' என்று கூறுவது பல்லாற்ருனும் பொருத்த முடைத்தென விழைந்து கூறுவதுமுண்டு. பள்ளிக்கூட நாள் அல்லாத சனிக்கிழமைதோறும் இவர் வாரப் பள்ளிக்கூடம் வைத்துப் பாடஞ் சொல்லிவருவார். அன்று பெரும்பாலும் பெயின் என்பவரது ஆங்கில இலக்கணத்தை (Bain's English Grammar) மாணவர்கள் விதி விதியாகவும் பத்தி பத்தியாகவும் பாராமல் கூறும்படி வற்புறுத்துவார். பள்ளியில் குறிப்பிட்ட கால அளவுக்கு மேலே மாணவர்கள் உள்ளத்தைக் கவியச்செய்ய அன்னர்க்கு ஆர்வம் பிறப்பிப்பார். இவரைப்போன்று வேறு ஆசிரியர் யாராவது அளவுக்குமேல் எப்போதாவது காலம் நீடித்து வைத்துக்கொண்டால் பிளேக்துரை அவர்கள், தங்களைச் சண்முகம்பிள்ளையென்று எண்ணிக் கொண்டீர்களோ என நகைக் குறிப்புத் தோன்றப் புலப்படுத்துவாராம். இத்தகைய இவரது அரும்பெரும் சிறப்பியல் யாவும் விரிப்பின் பெருகும்: தொகுப்பின் எஞ்சும்.

அருளாசிரியர் டாக்டர் மார்சு (Dr. Marsh) என்ற துரைமகனர், ஆங்கிலக் கல்வியெனும் பயிரைத் தஞ்சையில் வளர்த்ததனுலும் தாம் மனங் குழைந்து அல்லலுற்றிருக்குங்காலை, குருமகனைத்தோன்றி, மருந்தினுமினிய திருந்துமொழி கூறி, மனக்கவலையினை மாற்றியதனுலும் அவரைப்பல நூற்ருண்டுகளுக்கு ஆசிரியராக விளங்கும் நறுமுனிபுங்கவரெனக் கருதி (A sage is the instructor of hundred ages) இவர் வாழ்ந்த பான்மையின் மேன்மைக்கு அறிகுறியாய் இலங்க,

சண்முகச் செல்வனார் Marsh Hall எனும் ஓர் நிலையத்தைத் தஞ்சையில் நிறுவினர்.

பேராசிரியர் சண்முகம்பிள்ளை ஆசிரியர் கடமைகளை ஆற்றி முடித்தபின் எஞ்சிய நேரமெல்லாம் உயிர்க்குறுதி பயக்கும் ஞான ஆராய்ச்சியின் கண்ணே கழிப்பர். தஞ்சைக் கீழவாயலில் புத்தகக் கடைவைத்து, சாத்திரத் திறமைக் கயிற்றிற் புகழைப் பிணித்த திருவாளர் திருவேங்கடம் பிள்ளை இவருக்கு ஆருயிர் அருமை நண்பராக அமைந்திருந்தார். நம் ஆசிரியர் அங்கு ஒவ்வொருநாளும் மாலையில் தமிழறிவமுதைப் பருகும் தகைமையைக் கண்ட நற்றமிழ்ப் புலவராம் திரு. சுப்பிரமணிய அய்யர்

> புத்தகமா மின்னமுதம் புற்புதச் சூதகுண்டும்
> நத்துறு வெண்காகிதமா நற்றிரையும்—முத்தமிழின்
> முக்கவிதேர் மாமதுரை முத்துக்கொண் டேருறலால்
> இக்கடையே பாற்கடலா மே.

என அப் புத்தகக் கடையைப் புகழ்ந்து கூறியது அறிந்தின்புறற்பாலது.

உடல் நலங்குன்றுதல் காரணமாகச் சண்முகச்செல்வனார் ஆசிரியர் பணியை 1900-ஆம் ஆண்டு விடுத்தார். எஞ்சிய வாழ்க்கையின் நேரத்தை இவர் பெரியார் வரலாற்றைக் கற்றுத் தெளிதலில் பயன்படுத்தினர். ஒவ்வொரு ஆண்டும் கோல்டுஸ்மித் (Goldsmith) இயற்றிய வேக்பீல்டு ஞானியார் (The Vicar of Wakefield), அதி வீரராம பாண்டியர் இயற்றிய நைடதம் தவருது படித்தின்புறுவர். கற்ற நற்றவராம் இவர், வாழ்வின் உண்மைகள் யாவற்றையும் உயர்நிலையினின்று தெளிந்துணர்வது கடவுட்பணியென வுணர்ந்து திருவாசகத்தை ஓதிப் பரவசப்படுவார். விழுமிய நூலறிவினன் தாம் அரிதிற் கற்றுணர்ந்ததை மாணக்கர்களுக்குத் தெளிவாக விரித்துரைத்து அதனல் இன்னிலை வாழ்க்கை நடாத்திய இவர் இறுதியில் புலமை முதிர்ச்சியின் முடிந்த பயனும் மெய்யுணர்வு கைவரப்பெற்றுத் துறவறப் புலமை வாழ்க்கையிற் றலைப்பட்டார்.

கடமை யுணர்ச்சியினல் உந்தப்பட்டு எளிய வாழ்வு கொண்டு ஒழுக்கந்தவருது வாழ்ந்த இத்தலைவர் மனமொத்த இல்லறத்தார். இவர் தம் இல்லக்கிழத்தி 1918-ம் ஆண்டில் புகழுடம்பெய்தவே, நாணம், மடம், அச்சம், பயிர்ப்புஎனும் பெண்மையின் அணிகலன்கள் நான்கும் இயற்கையாய் வந்தடுத்த இவர்தம் மகளார் திரு. சுந்தரத்தம்மாள் என்ற இல்லறச்செல்வியின் காப்பிற்றங்கி, முதுமையை சிறுர்களின் கல்வி வளர்ச்சியில் மிகவும் கருத்தினராயும், பலருக்கு உரிமைப் பணிசெய்யும் பரிவினராயும் கழித்து (1925) இரத்தாட்சி ஆண்டு பங்குனித் திங்கள் 26-ம் நாளில் சிறந்தார நடமாடும் கலையுருவினன் திருவடிக்கண் சார்ந்தார். இவர் தம்எளிய வாழ்க்கையில், வினைமுயற்சியான் வரும் இன்னமையை இன்பமெனக் கருதி, தன்னலமறுத்து வாழ்ந்த தகைமையினை ஆயுங்காலை, தன்னைத் தலையாகச் செய்வானும்தான் என்றபடி இவர்தம் கூர்ந்த கல்வியறிவினுனும் விரிந்த உள்ளத்தில் மலரும் சிறந்த பண்புகளானும் தம்மைத் தாமே அயரா உழைப்பால் உயர்த்திக்கொண்டாரென்பது புலனுகின்றது.

---

புலவர் கல்லூரித் தலைவராக,

## திரு, P. R. மீனாட்சிசுந்தரம் M. A., அவர்கள்

**நியமிக்கப் பெற்றுள்ளார்.**

ஆங்கிலப்பேரரசின் இளவரசரால் தமிழகத்திற்றலைமைசான்ற புலவரென மதித்துப் பரிசளிக்கப் பெற்றவரும், திருவையாற்று அரசர் கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியராயிருந்து பணியாற்றிப் புகழ் கொண்டவரும், சிறந்த வுரைநடை நூல்கள் எழுதுவோர்க்கு வழிகாட்டும்பான்மையில் கரிகால் பெருவளத்தான் முதலிய சிறந்த ஆராய்ச்சி நூல்களை எழுதி வெளியிட்டவரும் ஆகிய **பண்டிதர் L. உலகநாதபிள்ளைக்கும்,** புதுக்கோட்டை மன்னருக்குத் தமிழாசிரிய ராயிலங்கிப்புகழ் கொண்டுள்ள பண்டிதர் **L. உலகநாதபிள்ளைக்கும்,** பெயரராகிய P. R. **மீனாட்சிசுந்தரம் அவர்கள்** இன்று எம் புலவர் கல்லூரி முதல்வராக (Principal) நியமிக்கப்பெற்றுள்ளார்.

இவர் மாணவராகக் கல்விபயிலும் காலத்திலேயே ஆங்கிலப் பேச்சுப்போட்டியில் வெற்றிபெற்று, வெற்றிபெற்றமைக்கறிகுறியாக அறிஞர்கள் "ஆங்கிலநாவலனென" மதித்தளித்த பதக்கத்தையும், நற் சான்றுத்தாளையும் (Certificate) பெற்றுள்ளார். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் மாணவராகக் கல்வி பயிலும் காலையில் அப் பல்கலைக்கழகக் கட்டுரைப் போட்டியில் வெற்றிபெற்று, **சர். சி. பி. இராமசாமி ஐயருடைய** முதற் பரிசினைப் பெற்றுள்ளார். அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீட்டிதழ் ஆசிரியர் குழுவினருள் ஒருவராக ஓராண்டிருந்து பணியாற்றியுள்ளார். அண்ணாமலை நகரி லுள்ள, "கூத்தவை" (Dramatic Club) நட்புமுறைச் சீர்த்திருத்த கழகம் (Social Reform Club) முதலியவைகட்கு அமைச்சராயிருந்து பணியாற்றியுள்ளார். புதுக்கோட்டைத் திருவள்ளுவர் கழக அமைச் சராகப்பணியாற்றியுள்ளார். புதுக்கோட்டைப்பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் இரண்டாண்டுகள் தமிழாசிரியராகவிருந்து பணியாற்றி யுள்ளார். மதுரை சென்மேரி உயர்நிலைப்பள்ளித் தலைமைத்தமிழாசிரி யராகஓராண்டிருந்து பணியாற்றியுள்ளார். புதுக்கோட்டைத் தனிய ரசிலுள்ள மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க்கலாசாலையின் முதல் வராக (Principal) மூன்றாண்டுகள் பணிபுரிந்துள்ளார். திண்டுக்கல் சென்மேரி உயர்நிலைப்பள்ளியில் தலைமைத்தமிழாசிரியராக ஓராண்டி ருந்து பணியாற்றியுள்ளார்.

பரம்பரைப்புலவர் குடும்பத்தில்தோன்றி மதுரைத்தமிழ்ச்சங்கப் பிரவேச பண்டிதம் முதலிய தேர்வுகட்கு முறையேபயின்று தேர்ச்சி பெற்று, எம். ஏ; தேர்விலும் இரண்டாவதுவகுப்பில் வெற்றிபெற்று பல உயர்நிலைப்பள்ளிகளில் தலைமைத் தமிழாசிரியராகவும், கல்லூரி முதல்வராகவுமிருந்து பணியாற்றிநிறைந்தபயிற்சிபெற்றுள்ள இவரை இன்று எம் கரந்தைப் புலவர்கல்லூரி தலைவராகப் பெற்றுள்ளமை யால் நன்கு தழைத்தோங்குமென எண்ணுகின்றேன். இவர், இளமை யும் ஊக்கமும் ஆற்றலும் மிக்கவராதலின் கல்லூரியின் புகழ் நாடெங்கும் பரவ நற்பணியாற்றிக் கவின்புகழ்கொள்வாராக.

**ஐ. குமாரசாமிபிள்ளை,**

**கரந்தைப்புலவர் கல்லூரி எழுத்தாளர், தஞ்சை.**

**தென்னாட்டுப் போர்முன்னணி அமைப்பாளர் தலைவர்,**

**திரு. சர். பி. டி. இராசன், B. A. (Oxon.) Bar-at-Law அவர்கட்கு,**

**கரந்தைத் தமிழ்ச்சங்கத்தா ரளித்த**

***வாழ்த்தியற் பாக்கள்.**

தமிழ்மொழியின் மாண்புயரத் தலைச்சங்க முதலாமுச் சங்கம் நாட்டி
அமிழ்தறழின் றமிழினையே ஆர்வமுறப் போற்றியெமக் களித்தோ ராய
தமிழரசர் பாண்டியர்கள் தனிச்செங்கோ லோச்சியநற் றமிழ்நாட் ரோம்
தமிழ்முழங்குத் தமபானை யப்பதியின் தலைவ!எங்கள் சான்றோய்!! வாழி!!!
ஆங்கிலம்பே ரானிலையம் அணிகழகந் தனையடைந்தங் கடைவே கற்றே
ஓங்குபெறும் பாரட்லா உயர்பட்டம் பெற்றதன்மேல் உயர்வே யொன்ற
ஈங்குயர்ந்த எம்நீதிக் கட்சியினி லொன்றியெழில் ஏற்றங் கண்டு
தாங்குமத னுயர்வினிலும் தளர்வினிலுந் தலைமைகொளுந் தலைவ! வாழி!!
தென்னாட்டுப் பழங்குடிகள் திறனழிந்து நிற்குநிலை தேர்ந்து முன்னாள்
பன்னாட்டு மக்களைப்போல் பாங்குபெற வாழவழி பகுத்துத் தந்தே
தென்னாட்டு நலவுரிமைச் சீர்கழகந் தனைநாயர், தியாக ராயர்
முன்னாட்ட அவர்களின்பின் முதன்மைபெறுந் தலைமைகொளும் முதல்வ!வாழி!!
அந்நாளின் றமிழரசர் அவனியிடை யோருருவா யமைந்தா ரென்ன
இந்நாளி லெல்லோரும் ஏத்துமுயர் எழிற்சங்க மினிதின் நாட்டி
எந்நாளும் தன்னுயிரே எனவளர்த்த தமிழுவேள் எங்கள் கோவே!
இந்நாளி லிலரவரின் எண்ணமெனுங் கோயிலிடை எழுந்தோய்!!வாழி!!!
பன்னுமுயர்நீதியினைப் பாரிடத்தில் நிலைநிறுத்தப் பணியேற் றந்நாள்
துன்னுபெரு மெதிர்ப்பிடையே தோன்றல்வளர் நெறியமைச்சர் தொண்டே ஆற்றிப்
பின்னரெவ ரமைச்சரிவண் பேச, பி. டி. இராசனைப்போல் பிறங்க நன்றே
நன்னரமை யாட்சிசெய நானிலத்தி லெனப்புகழை நாட்டோய்! வாழி!!
இன்னனைய நின்பண்பை இனிதோர்ந்தே ஆங்கிலமன் னெவரும் போற்றத்
துன்னுமுயர் நல்வீரத் திருவெனுமின்பட்டமெலாந் துங்க மொன்ற
மன்னுறவே வழங்கினர்நின் மாட்சிதெளித் திடமேலும் வரைதற் காமோ?
அன்னையினுஞ் சிறந்தநம தணிதமிழ்க்கே தொண்டாற்றி யமைந்து வாழி!
எஞ்சாதிங் கரசியலா ரிறங்கியுள போர்வென்றி யெய்த வேண்டி
அஞ்சாத ஆண்மைசெறி ஆண்டகைநின் றனைத்தமிழ்நாட் டாட்சி செய்யும்
எஞ்சாத நாட்டுப்போர் முன்னணியின் தலைவனென ஏற்றாரீதே
எஞ்சார்பாம் வெற்றியெனும் இனியவொரு குறிப்பன்றோ இயம்ப லென்னே!
உலகில்வளர் நாகரிகத் தொருபெரிய பகைவரென உற்றோ ராய
அகிலவா மார்ப்பெழுப்பும் ஹிட்லரும்நல் உருசியநா டடைந்த தாலே
பலநலவாம் படையொழிந்தான் பார்நகைக்க முசோலினியும் பதுங்கி யுள்ளான்
வலியிலாவட் டோசோவும் மயங்குகின்றான் வென்றியினி வரைதல் யார்க்கே?
மீண்டுமுனை வரவேற்பேம் வென்றிமிகு வீரவரு கென்றே மேலும்
காண்டகுமெங் கரந்தைவளர் கவின்சங்கந் தழைவுறவே கடமை யோர்ந்து
வேண்டியசெய் திடைப்புரந்து வீறுடனே புகழ் கொண்டு விறலார் கோவே!
ஆண்டவனெம் இறையருளால் அணிபதவி பெற்றுயர்ந்திங் கமைந்து வாழி!!

| | |
|---|---|
| கரந்தைத் தமிழ்ச் சங்கம்,<br>தஞ்சை,<br>தாரண, சித்திரை, கஅ. | இங்ஙனம்,<br>**A. Y. அருளாநந்தசாமி நாடார்,**<br>சங்கத்தலைவர். |

*இப்பாக்களை இயற்றியவர்:-பொழிலாசிரியர், கோ. சி. பெரியசாமிப்புலவர்,

# வைணவம்.

திருவாளர், துரையரங்கராமானுசதாசர் அவர்கள்,
நகரக் கண்காணிப்பாளர், புதுவை.

(முற்றொடர்ச்சி: துணர்-௰௧, மலர்-எ, பக்கம் 133.)

---

இப்படி, எல்லாச் சமயங்களுக்கும் தாயகமானதும், "ஒன்றே குலமும் ஒருவனே தெய்வமும்" என்கிற உண்மையை விளக்கி மக்கட்கு எங்கிலையிலும் இன்பந்தந்து உறுதி பயப்பதும், பரந்த, ஆழ்ந்த, நுண்ணிய நோக்கங்களையும் கொள்கைகளையும் உடையதும், முற்றும் தூயதுமான இச் சமயத்தின் மேன்மையைக்கண்ட எம்பெருமானார் இதனைப் பெரிதும் போற்றி வளர்த்துத் தழைக்கச் செய்தார். அதனாலே, இது "எம்பெருமானார் தரிசனம்" என்று அவர் பெயரால் வழங்கலாயிற்று.

> "எம்பெரு மானார் தரிசனமென் றேயிதற்கு
> நம்பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்தார்—அம்புவியோர்
> இந்தத் தரிசனத்தை எம்பெருமா னார்வளர்த்த
> அந்தச் செயலறிகைக் கா."

என்று திருமணவாள மாமுனிகள் பேசியுள்ளமை காண்க.

மொழியைக் கடக்கும் பெரும்புகழாளர் கூரத்தாழ்வார் இத் தரிசனத்தைத் தம்மிரு கண்களினும் சிறந்ததாகப் பேணித் தமது கண்களைத் தந்து காத்துவைத்தார்.

இந்த உண்மையை அறிந்த இக்கரந்தையம்பதி திருமால்சமயத்தின்கண் அன்பு மீதூர்ந்து, அதன் சீரிய கொள்கைகளை ஊரும், நாடும், உலகமும் அறியப் பரவச்செய்து, மக்களை வாழ்விப்பான் "எம்பெருமானார் தரிசனசபை"யை நிறுவியுள்ளது உலகம் செய்த நற்றவமாகும். ஆதலான், உண்மை அறிவாற் சிறந்து விளங்கும் பெருந்தமிழர்களாகின்ற நுவ்வீர் அனைவரும், தமிழ்மக்கள் நலன்கள் தழைக்க, இச்சபையை ஆதரித்து, வளர்த்து வரும்படி, தமிழன்னையின் பெயரால் நுங்களை வேண்டிக்கொண்டு, அடியேன் மழலைச் சொற்களை இத்துடன் நிறுத்திக் கொள்ளுகின்றேன்.

> "ஆழ்வார்கள் வாழி, அருளிச்செயல் வாழி,
> தாழ்வேது மில்குரவர் தாம்வாழி,—ஏழ்பாரும்
> உய்ய அவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
> செய்யமறை தன்னுடனே சேர்ந்து."

---